உ

சிவமயம்.

# பதசாகித்யங்கள்.

இஃது,

திருநெல்வேலி

புதுத்தெருவிலிருக்கும்

மகா-ா-ா-ஸ்ரீ

## அழகியசொக்கநாதபிள்ளை

அவர்களியற்றியவை

காரைக்கால்

முகம்மதுஸமதானி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1903-ஞு.




ரூ. 1-80

உ

கடவுள் துணை.

# இப்புத்தகத்திலடங்கிய

# பதசாகித்யங்கள்.



நாடகத்தமிழாகையாலும் இதிற் பிரகிருதி வார்த்தைகளும் ஸ்வல்ப இலக்கண வழுக்களும் சம்பந்தப்பட்டிருக்கையாலும் அவைகளைக் கற்றறிந்த முத்தமிழ்க் கவிவல்லோர்கள் குகளெனக்கருதாது (இழுக்குடையபாட்டிற்கிசைநன்று) எனச்செப்பியகாரிகைக் கருத்தின்மேற்கோளைபங்கீகரித்து என்னை இகழாது புகழ்வீர்களென்பதாம் வந்தித்துச்சிந்தித்து ஏற்றிப்போற்றி துதித்துமதித்து வணங்கி இணங்கிக்கொண் டிருக்கின்றனன்.

இங்ஙனம்,

அழகிய சொக்கநாதபிள்ளை.

உ

கடவுள் துணை.

# பதசாகித்யங்கள்.

இ-ம்-சங்கராபரணம்-சாப்புதாளம்

பல்லவி.

சந்திவிநாயகனே-பஞ்சாட்சர
மந்திரதேசிகனே.

அநுபல்லவி.

முந்திபெவ்வுல கோரும்
வகதித்த அருள் கூரும்
மூர்த்தியேயென் தொல்லை
தீர்த்தருள்வாய் கெல்லைச்-சந்தி

சரணங்கள்.

மாதாபிதாக்குரு
நீதானல்லவோ ஆகு
மீதானந்தங்கொ[illegible]மீறும்
போதபவல்லபைபாகா
வேதாவுந்தொழுங்கணா
நாதாஎனக்குநின்
பாதாரவிந்தம் அல்லால்
ஆதாரம்வேறில்லை. சந்தி
இடித்தவாரிதியைமுன்
குடித்தவாமனமுனி
பிடித்தவான்காவீர்
வடித்தவாமலர்க்கொன்றை
முடித்தவாகொம்பில் ஒன்
றொடித்தவா அசுரரை
மடித்தவா அரன்மார்பில்
நடித்தவா அருள்செய்வாய். சந்தி

## பதசாகித்யங்கள்.

திக்கஞ்சும் நமனால்தண்
டிக்கப்படாவண்ணம்
பக்கம்நின் றென்மனத்
துக்கந்தீர்த்தாட்கொள்வாய்
மிக்கசீர் அழகிய
சொக்கநாதனுக்கருள்
மூக்கண்மும்மதத்தைந்து
கைக்கஜமுகங்கொண்டு. சந்தி

இ-ம் - செஞ்சுருட்டி ஆதிதாளம்

பல்லவி.

கந்தாசிவகுருநாதா-தேவா
வந்தாள் ஷண்முகா

அநுபல்லவி.

கந்தாசலவேலா
செந்தில்வாழும். கந்தா

சரணங்கள்

கங்கைபாலகா-காகுத்தன்மருகா
செங்கைகுவித்தன்பர் கந்தா.

சிந்திக்கும்-ஓம்
சர-வண-பவ-குக
சிந்தாமணி
சங்கரன்-அருள்-ஐங்கரன்-மகிழ்
சோதரசுந்தர
சுகுணபரிபாலன்
நின்தாரகம் கந்தா.

பட்சமாகவே பார்த்தின்பம்மிகவே
இட்சணம்ரட்சியா விடில்

என்றனக்கினி
இனி-ஒரு-புகல்-உண்டோ
என்றாட்கொள்வாய்
தெட்சணதிசையைச்சமஞ்செயும்

ஓர்முனிக்குபதேசம்
உதவுசொரூபாகடப்
பந்தாரணி கந்தா.

உந்தராதிபா-அற்புதசொரூபா
வேந்துஷ்டநிக்ரகா புகழ்ச்
சந்தஞ்சொலும்
அழகியசொக்கநாதன்
சஞ்சலந்தீர்
சுந்தரமுகமந்தரதன
மான்மகள்சப்பரம்
மருவுகிருபாகா
செந்தூர்அருட் கந்தா.

இராகம்-காபி-ஆதிதாளம்

பல்லவி.

காந்திமதிஉனை நம்பினேன் அம்மா.

அநுபல்லவி.

ஆருந்துணை இல்லை
அருள்செய்வாய் தெல்லைக்-காந்தி

சரணங்கள்.

அன்புள்ள தாயே
அடிமைகொள் வாயே
என்பிழையை நீயே
இனிப்பொருப் பாயே
காந்திமதீ.

இருவினை நீக்கு
இரங்கிக்கை தூக்கு
திருவருளநல வாக்கு
செழித்தி நோக்கு
காந்திமதீ

அழகிய சொக்க
நாதன் துதிக்க
பழமறைபுகழ் மிக்க
பதந்தரத் தக்க
காந்திமதி

இராகம்-சங்கராபரணம்-ஆதிதாளம்-சாப்பு.

பல்லவி;

தாயே இந்தவேளை காப்பாற்றம்மா

அநுபல்லவி:

நீயேதஞ்சம் அம்மா நித்யகல்யாணி
நெல்லைநாதர் பங்கில்வாழும் காந்திமதித்.

சரணங்கள்.

மண்ணைப்பெண்ணைப் பொன்னை
வருந்திக்காலம் தன்னை
வயிற்போக்கிப் பின்னை
நம்பினேன் உன்னை
தண்ணருளால் முன்னை
தப்புமன்னித் தென்னைத்.

தாயே.

தொடுக்குசென்மம் பேர்த்துப்
படைத்திடாமல் தூர்த்துப்
தொண்டரோடே சேர்த்துக்
கொண்டருள் பூர்த்துக்
கடைக்கண்ணாலே பார்த்துக்
கஷ்டமெல்லாந் தீர்த்துக்

தாயே.

அழகிய சொக்க
நாதன்செய்யும் துதி
ஆயுதத்துக் கதி
அருள்கிருபா நிதி

வினைமுழுஞ் சொல்லைப் பதி
மேவு காந்தி மதித்

தாயே.

இராகம்—பூபாளம்-சாபுதாளம்.

பல்லவி.

காந்திமதித் தாயே
கண்கண்டதெய்வம் நீயே
கருணைசெய்ய இதுதருணமே.

அநுபல்லவி.

தாந்திமித் தோம்என்னத்
தாம்பர சபையில்ஆடும்
சங்கரர் நெல்லையப்பர்
பங்கினில் வீற்றிருக்கும் காந்திமதி.

சரணங்கள்.

கருப்பைக்குண் முண்டைகளும்
கல்லுக்குட் டேரைக்கும்
காதலுற்றமு தூட்டும்அன்னையே-எனக்
கிருப்பதாகியகஷ்டம்
எல்லாம்நீயறியாயோ
என்னைமட்டுநீபெற
இல்லையோ சொல்லம்மா காந்திமதி.

பேதைமைப்புத்தியினால்
பிள்ளைகள்செய்கின்ற
பிழைபொறுத்தாதரிப்ப-தார்—அம்மா—லோக
மாதாவாயிருந்துநீ
யர்மஞ்சாதிப்பதேதோ
மலையிற்பிறந்தால்உன்
மனதுக்கல்லாய்ப்போச்சே காந்திமதி.

பொய்க்கும்ஜனனம்எடுத்
திதுவரைபெற்றலாபம்
போதும்போதும்போதுப-அம்பணி-அன்ப
வைக்கும் அழகிய
சொக்கநாதனுக்கருள்
வாக்குக்கொடுத்துவினை
தீர்க்குந்திருநெல்வேலி காந்திமதி.

இ-ம். யமுனைகல்யாணி—ஆதிதாளம்.

பல்லவி.

நம்பினேன் மெய்யா
ரட்சித்தருள் ஐயா

அநுபல்லவி.

அம்புயமலர்ப் பாதா
அணிநீலமணி நாதா
நம்பினேன் மெய்யா

சரணங்கள்.

சாரங்கநெடு மாலே
காயம்இப்புவி மேலே
நீரிற்குமிழி போலே
நிலையில்லாததாத லாலே
நம்பினேன்மெய்யா

பிராணபயந்தீர்த்தி ரண்டு
பேர்களைவேந்தாக்கிப் பெண்டு
துரோபதைதுயரங் கண்டு
துகில்கொடுத்தாண்டதுங் கொண்டு
நம்பினேன்மெய்யா

ஞாலஅழகிய சொக்க
நாதன் தமிழ்க்கருள் மிக்க
நீலமணிநாதா மெய்க்க
நித்யானந்தத்தினில் வைக்க
நம்பினேன்மெய்யா

இ-ம் தோடி—ரூபகதாளம்.

பல்லவி.

சரசமாக மருவிகூடத்
தையலே மையலானேன்.

அநுபல்லவி.

பரசுபணியின்றருளிய
பன்னிருகைவேலனைச். சரச

சரணங்கள்.

மாங்குயில்வசை கூறுதே
மாமுலையிரண்டும் மீறுதே
பூங்கணைமதப்பாவிபெய்கிறான்
புட்பசயனமேவியே. சரச

கோலவளையல் நழுவுதே
கொங்கையைக் கண்ணீர்கழுவுதே
நூலிடைதள்ளாடுதே—அரை
நொடியிலே அழைத்தோடிவா. சரச

பழகியெனக்கிவ்வளவுதவி
பண்ணுவாய்கோடிபுண்யமே
அழகியசொக்கநாதனுக்கருள்
ஆறுமாமுகவேலனைச். சரச.

இ—ம் பியாகு—ரூபகதாளம்.

பல்லவி.

இந்தவிதம்பேசவும் மனம்வந்ததோசாமி நான்
நொந்தேனே காமி.

அநுபல்லவி.

செந்திலம்பதிவாழ்குமரா
சரதவ்வேலா என்
அந்தரங்கம் அறிந்திருந்தும்

பத்சாகித்யங்கள்.

ஆதரி யாமல்-மூன்
அன்பும் எண்ணாமல் இந்த

சரணங்கள்.

நேசத்தோடென்னை கூடினதென்ன
பாசாங்கோசாமி ஆரோ
மோசக்காரிபேதகம் இதோ
பாசமும் போகதா
பந்தம் உண்டாக இந்த

சங்கடம்படும்படிக் கென்மீதில்
பங்கம்சொன்னீரே முன்போல
இங்கிதமாய் எனைச்சேராமல்
ஏன்காண் இக் கூத்து ஏ
தென்றலைப் பார்த்து இந்த

அழகியசொக்கநாதன்செந்தமிழ்க்
கருள்வடிவேலா மெத்தப்
பழகியதேச வாஞ்சையையெண்ணிப்
பஞ்சணை மீது நீர்
கொஞ்சாதிப் போது இந்த

இ-ம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்

பல்லவி.

இந்தனைகோபம்-ஏன் ஐயா
என்னகுற்றம் நான்செய்தேன்.

அநுபல்லவி.

சித்தம்நோவ நடந்ததுண்டோ
செந்தில்வாழும் கந்தனே. இந்தனை

சரணங்கள்.

கஷ்டஞ்செய்தோனோ ஊர்குருவிமேல்
ராமபாணந் தொடுத்தாற்போல்

நஷ்டபடுத்தலாகுமோ
இஷ்டம்இல்லையோ என்றன்மேல். இத்தனை

ஊரானகவலையைத் தான்பலித்தோ எனக்
குற்றதுணைவேறுண்டுமோ
ஆராகிலும் நம்மிருவருக்கும்
ஆகவொட்டாமற் செய்தாரோ. இத்தனை

பாதம்பணியும் அழகியசொக்க
நாதன்பாடல் மறந்தேனோ
காதலுடனேகலந்துசேரக்
கருணைசார்செந்தில்க்கந்தனே. இத்தனை

இ-ம் பியாக் ரூபகதாளம்.

பல்லவி.

இந்தமோடி செய்பலாமோசகிக்க
என்றால் கூடுமோ.

அநுபல்லவி.

அந்தரங்கமும் மறந்துபோச்சுதோ
செந்தில்மாநகர்க் கந்தனே. இந்த

சரணங்கள்.

சலவிசெய்திடாமற்சும்மா
கடுப்பாயிருப்பதேதையா
வலியவந்துநான் நலவுசொல்லியும்
மனம்இரங்காதின்னமும். இந்த

பிடிமுரண்டடாதென்சாமி
பிரிந்தாற்புகல்வேறுண்டோ
விடியுமட்டிலும் மடியில்வைத்தென்னை
விரகந்தீரக்கொஞ்சாமல். இந்த

பழமைவிடாமற்கூடும்
படிக்குங்கிருபையார்அய்யா

அழகியசொக்கநாதன் செந்தமிழ்க்
கருளுஞ்செந்திற் கந்தனே. இந்த

இ-ம் தோடி-ஏகதாளம்.

பல்லவி.

தாமதஞ்செய்யாமல்-என்றன்
சாமியைப்போய்க் கூட்டிவாடி.

அநுபல்லவி.

நேமிசூழ் செந்தில்வேள்
நீங்கிய இந்நேரம்
கோமளவில்லமாரன் அப்பால்
கொல்லாமற் கொல்கிறான். தாமச

சரணங்கள்.

தாய்க்கிணை நீயல்லவோ
தாங்கினேன் உன்னாடியை
தூக்கம்வரமாட்டுதில்லை
சும்மாஏன் நிற்கிறாய். தாமச

மானேஇச் சந்திரிகை
வம்பாகப்போகுதே
போகில்லாதே கோடிகோடி
புண்ணியம் உண்டடி. தாமச

காவலுடன்சேரக்
கந்தவேள் வந்தாக்கால்
கீதஅழகிய சொக்க
நாதன்பதம் பாடுவேன். தாமச

இ-ம் யமுனாகல்யாணி-ஏகதாளம்.

பல்லவி.

இன்னம்வரக்காணமே நாதன்
என்னசெய்குவேன் சாமி என்டி.

அநுபல்லவி.

பன்னிருகை முருகேசன்
பிரா ணேசன் தனை — இன்

சரணங்கள்.

ஏதென்மேல் வாதோ
யார்செய்த சூதோ
நாதன் எங்கிருப்பான்
நாழிகை பதினைந்தாச்சே. இன்.

அரைச்சணம் கூடப்
பிரியேனென் றென்மேல்
அந்தரங்கமதாய்
ஆணையிட்டதுவும் போச்சே. இன்.

அழகிய சொக்க
நாதன்சொல் மோகன்
அன்பாய் என்குகவேள்
ஆசையோ டணைத்துச்சேர. இன்.

இ-ம்-தன்யாசி—ஆதிதாளம்

பல்லவி.

வருவானோ வாரானோ மானேதேனே

அநுபல்லவி.

சரசமாய்க்கூட
ஷண்முகநாதன். வரு.

சரணங்கள்.

கணைமதன் ஏவ
கருங்குயில் கூவ
கனல்மதி தாவ
கஷ்டப்உற்றிடும்என் னை மேவ. வரு.

இங்கிதம் தேடி
சங்கீதம் பாடி
இன்பமாய்க் கூடி
இஷ்டமாயிருந்ததை நாடி. வரு.

அழகிய சொக்க
நாதன்சொல் காழி
அருள்கிருபா நேமி
அஷ்டதிசைபுகழ்கந்த சாமி. வரு.

இந்தப் பதத்தின் ஒவ்வொர் சரணத்திலும் கடைசி அடியைமாத்திரம் மூன்றுதரம் மடக்கிப் பாடவேண்டும் அப்படிப் பாடுவதில்

அடி பெண்ணே
அடி கண்ணே
அடி சகி

என்ற மூன்று வாக்கியங்களையும் தடவைக்கொன்றாக முறையே பிரயோகித்துக் கொள்ளவேண்டும.

இராகம்-காம்போதி-சாபுதாளம்.

பல்லவி.

தனித்திருப்போமே டீசகியே நித்தம்

அநுபல்லவி.

எனைத்தழுவியந்தரும்கும
ரேசனையுமவிட்டு தனித்.

சரணங்கள்.

எப்போதும்கொக்கோக நூலேவகுத்து
இன்பமுறைதவறாமல் இணையின்றி போல
சப்ரமஞ்சப் புட்பஅணை மேலேசேர்ந்து
சையோகசுகத்தை அரைட்சணமறந் தென்றாலே
தனித்திருக்கட்.

குழையசையும் பன்னிரண்டு காதும்வாயில்
குஞ்சிரிப்புமதனம்பார்த்துக்கொண் டிருந்தாற்போதும்
பிழைபடவே அணுகாதோர் நீதும்அவனைப்
பிரிந்திடுமுன்னடந்ததெல்லாம் நினைந்திடில்இங்கேதாம்
தனித்திருக்கப்,
நற்களபம் பூசிமலர் சூடிப்பெருகும்
நளின அழகிய சொக்கநாதன்பதம் பாடி
சற்குணமாய் கூடிவிளை யாடி இன்பம்
தழைக்கஉருமலைக்குமரன்தனை யழைத்துவாடி
தனித்திருக்கப்.

இ-ம் - செஞ்சுருட்டி ஏகதாளம்

பல்லவி.

என்மேல் கோபமோ துரைசாமிக்
என்மேல் கோபமோ
ஏன் இன்னமும் வரக்காணோம்
சாமி, பின்னை, சொல்வேன்

அநுபல்லவி:

சென்ம சாபல்யந் தந்திடும்
திருச்-செந்தூர்ச் சண்முகநாதா
என்-துரையைச் சேராமலே
மெத்த-நான்சிந்தை நொந்தசங்கீதனடி. என்மேல்.

சரணங்கள்

சோதனைக்கி யாரோபோதனை
யையச்-சொல்லிவேடிக்கை பார்க்கும்
பல-விதமாய்த் தோணுதடி
என்றும்-ஓர்குறும் செய்தறியாத என்மேல்.

சகியே இன்றைக்கிராத்திரி
என்றன்-சாமிவராவிட்டால் நான்
பூங்கணைக்குத் தாங்குவேனோ
கொள்-நீதான் திருத்திடவேணும் என்மேல்.

அழகியசொக்கநாதன்சொல்
கித்தம்-அருமைச் செந்தமிழ்ப்பாடி
பசும்-துதிக்கும் அன்பர்தம்மை
மிக-ஆள்செந்தில் பதிவேலர்க்கென்மேல் என்மேல்.

இஃது

தில்லாணு.

இ-ம் தோடி-ஏகதாளம்.

பல்லவி.

ஆர்போய்ச்சொல்வார் சுவாமிக்
கியார்போய்ச்சொல்லுவார் எனக்குவேண்டி.

அநுபல்லவி.

சூரசங்கார
வீரசிங்கார-வேளை-க்-கண் யடி.

சரணங்கள்.

மதன் அம்பு பாய்ந்து
விதனங்கள் தோய்ந்து
அடி——மானேயென்னேரமும் தேய்ந்து
மண்மேல்ச் சாய்ந்து
நான்நொந்ததியா

பாய்தென்ற லாலே
ரோய்கொண்டாற் போலே
மெத்த——பதறிநொநதேன்பல காலே
இனி மேலே
உனையன்றியார்

அழகிய சொக்க
நாதன் களிக்க
இன்பம்——அருள்வேலன்என்னைச் சுகிக்க
சம் மதிக்க
இந்நேரம்யார்

இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி:

நிச்சயமாய் வந்துசேர்வார்
தியங்காதே

அநுபல்லவி:

செச்சிடுஉன்றன்செந்தில்
வேலவர் நிச்சயமாய்

சரணங்கள்.

கொஞ்சமேனும் சந்தேகம்
கொள்ளவேவேண்டாம்
நேற்று——குறத்தியிடத்தில்நான் குறிகேட்டேன்
நிச்சயமாய்

கட்டைச்சித்தும்முகிறுள்
கவுளியடிக்குது
உன்———காரியம்செயம் சற்றேபொறுத்துக்கோ
நிச்சயமாய்

அழகியசொக்கநாதன்
பதமெலாம்படித்துக்கோ
செந்தி——ஆறுமுகவேலர் இன்றுநாளைக்குள்
நிச்சயமாய்

இ-ம்-நாதநாமக்கிரியை-ஏகதாளம்.

பல்லவி.

வரச்சொல்லடி ஒருவரும்இங்கில்லை
மானேநீ சும்மா

அநுபல்லவி.

துரைசிங்கமான திருச்செந்தில்வேலவர்
சுத்தஅன்னியர் போலத்தொரு
வாசலி லேவந்து
நிற்பானேன் உள்ளேவர

சரணங்கள்.

அரைநிமிஷம்யுகம் ஆகவேதோணுது
கோபமாய்ப்போனார் தானாக
வந்ததே அதிசயம்
அல்லவோ சீக்கிரம்வர

எதிர்கொண்டழையாமல் இருப்பேனோஇன்னமும்
ஊண்இறங்காமல் உறங்காமல்
தறைக்கிட கிடைக்கின்றேனே
என்செய்வேன் நீபோய்வர

அடுத்தெனக்குயிர்பிச்சை கொடுத்திட வந்தாரோ
தொடுத்தழகிய சொக்கநாதனை
செந்தமிழ்க் கருள்கந்த
சாமியை இங்கேவரச்

பல்லவி.

நேற்றுராத்திரி எங்கேபோனீர் சும்மாசொல்லையா இனி
நீர் என்னசாதித்தாலும் நான்நம்பிடேன்

அநுபல்லவி.

வேற்றுமுகம்பாரேன்
என்றஉண்மையெல்லாம்
நன்றாய்— வெளுத்துப்போச்சுதே செந்தில்வேலவா
நேற்று

சரணங்கள்.

கண்ணீர்ஆறாகப் பெருகச்செய்தீரோ
கூடிக்——கலந்தாறுதலையும் சேர்க்காமல்
நேற்று

பொருந்தும்உயிர்தன்னைபிரிந்தபுட்போலே
தனியே—புலம்ப இங்கென்னைவைத்துப்போட்டு
நேற்று

அழகியசொக்க நாதன்பதங்களைப்பாடி
உன்னை——ஆர்மயக்கினாள் முருகையா
நேற்று

இ-ய் தோடி—ஆதிதாளம்,

பல்லவி.

நீர் என்றேறும் பொய்சொல்லலர்குமோ

அநுபல்லவி.

ஒருபோதும்மறக்கவே
மாட்டேனென்றேயென்மேல்
முன்——உண்மைசொன்னதும்போச்சே
சண்முகவேலய்யா

சரணங்கள்,

அறுமுகா உமையன்றி
மறுமுகம்பாராத
நான்——ஆசைநாயகியல்லோநீர்
வேஷமோபாசாங்கோ நீர்.

வருவீர்வருவீரென்று
தெருவாசலிலேநின்று
மெத்த-மயங்கினேன்காணமல்
தயங்கினேன்ராவெல்லாம் நீர்.

அழகியசொக்கநாதன்
தமிழ்க்கருள்சிலர்
நித்தம்-அந்தரங்கமாய்ச்சேரும்
சுந்தரவேலய்யர் நீர்.

இராகம்-சாப்புதாளம்-பைரவி.

பல்லவி,

அடி-சகியேயிப்போது துரைசமயமென்ன

அநுபல்லவி.

சகியென்றுகுகவேள்
மனக்குறிப்பெல்லாம்
நன்றாக—தெரிந்தவள்நீயாச்சே சகி

சரணங்கள்.

கோபமுள்ளசமயமோ
நான் சந்தோஷசமயமோ
போனு—குணமாகவேபேசுவாரோ சகியே

தையல்வள்ளிதெய்வானை
காட்டி கூடஇருக்கின்றாரோ
முத்தத்—தனித்திருக்கின்றாரோ சகியே

பன்னிருகைவேளமெச்ச
காலங் தழுகியசொக்கநாதன்
இன்பம்— பதங்களைப்பாடவேண்டும் சகியே

இராகம்-காபி-ஏகதாளம்

பல்லவி.

அங்கேவரக்கூடாதையா எனக்
கங்கேவரக்கூடாதையா

அநுபல்லவி.

இங்கொருவரும்இல்லை
செங்கைவேல்முருகா அங்கே

சரணங்கள்.

திரண்டொருமாதமாய்
தெருவாசல்பார்த்தறியேன்
முரண்டுசெய்தால்
முடியாதொருபோதும் அங்கே

காற்றுள்ளபோதிலே
தூற்றிக்கொள்ளவேண்டாமோ
ஆற்றுக்குப்போனஎன்
அன்னைவந்திடுவாள் அங்கே

அருமைப்பதம்பாடும்
அழகியசொக்கநாதன்
பெருமைபெற்றிடஅருள்
உருமலைவேலாநான் அங்கே

சாணங்கள்.

இ-ம் பியாக் ரூபகதாளம்.

பல்லவி.

அவனிடத்தில் உனக் கேனடி பேச்சு
அடி உனக் கேனடி
சொல்வே உனக் கேனடி பேச்சு
ஜாடைசொன்னுல் தெரியாதோடி. நித்தம் அவ

அநுபல்லவி.

இவ்வளவுக்கிடம்வைத்தால் உருமலைவேலன்
இஷ்டஞ்செய்யாமல் விடானடி
எதுனக்கவன்மேல் நாட்டம்உண்டோடி
எத்தனையோசொல்லியும்-கேளாமல்சும்மா அவனி

சாணங்கள்.

சரசங்கள்செய்ததைக் கண்ணுல்கண்டேனே
சம்பிரதாயம்-பேசாதே
தாலியார்கட்டுவார் வெளிக்கிது தெரிந்தால்
தாய்க்கொளித்ததூஞ்டோநடத்தைநீசொல்லு அவ
இதழினில்வடுப்பட்டதேதடிசொல்லு
இந்திரஜாலம்பண்ணுதே
இந்தக்களைஉன்றனமுகத்தில்முன்உண்டோ
எத்துவாளித்தனமெல்லாம்எங்கேகற்றுய் அம்மா அவ
நளினமேபெருகிய அழகிசொக்க
நாதன்கவிருசி கண்டாயோ
நாணமும்போச்சுதே வேலப்பனுல்உன்
நடத்தைக்கண்டால்ஊர்சிரியாதோடிதனித் அவ

இராகம்—பூபாளம்-சாபுதாளம்.

பல்லவி.

அய்யோ இனியென்னுல்
ஆகவும்மாட்டாது
அருணோதயகாலம்ஆச்சுதே

அநுபல்லவி.

சையோகம்இராமும்பதும்
செய்ததுபோதாதோ சாமி
சண்முகாநான்மெத்தச்
சடைந்துபோயிருக்கிறேன் அய்யே

கரும்புருசியென்றுவேரோடேதின்னலாமோ
கசக்கிமோந்தால்புஷ்பம்மணக்குமோ—கல்லோ
இரும்போஎன்உடம்பினிஎடுக்கவொரண்டுசொல்லும்
இந்தமட்டினில்விடுமஇருசந்துநோவுது அய்

அளவுக்குமிஞ்சினால் அமிர்தமும்விஷமென்றே
ஆரும்சொல்வாரேகேட்டதில்லையோ—சித்தம்
இளகாததேனசுவர்இருந்தால் அல்லவோசித்திரம்
எழுதலாம்ராத்திரிமுழுதும்நித்திரையில்லை அய்

பழகியவடிவேலாஉண்மையல்லாபல்மெத்தப்
பட்சம்உள்ளவரார்எனக்குண்டுமோ—இப்போ
அழகியசொக்கநாதன்பதங்களைப்பாடுகிறேன்
அதைக்கேளும்இதுநாளைக்காகட்டும்கும்பிட்டேன் அய்

இராகம்-கமாஸ்-அடதாளசாப்பு.

பல்லவி.

கையில்பணம்கொண்டுவந்தால்
அந்தப்பேச்சுப்பேசலாம்

அநுபல்லவி.

பொய்யெல்லாதூரக்கட்டி
வையும்அறியேனே
பொல்லாதவென்தாயார்செய்தி
எல்லாம்தெரியாதகோ கையில்

சரணங்கள்.

வேசையர்மீதில்ஆசை
காசுக்கள்ளர்க்கேது
மிச்சமாகஅப்பாவென்றால்
உச்சிகுளிராதையா கையில்

சங்கீதசாகித்திய
வித்துவான்களென்றால்
சற்றும்தடைசொல்லமாட்டோம்
மற்றவர்யாராகிலும் கையில்
அழகியசொக்கநாதன்
காந்திமதிமேல்சொன்ன
ஆசைப்பதம்பாடினேனே
நேசித்தென்னநீர்தந்தீர் கையில்

இ—ம் பியாக்—சாப்புதாளம்.

பல்லவி.

அம்மாநமக்கிவன்சங்காத்தம்போதும்
ஆகாதாகாதினிமேல்

அநுபல்லவி.

சும்மாவந்துதொந்தரிக்கிறானே
துட்டுக்காசுதானேஓர்பெரிதோ அம்

சரணங்கள்.

கொண்டவன்போல்நித்தம் அண்டையில் படுக்கிறான்
குணமாகாடந்தாலும்குற்றங்கள் எடுக்கிறான்
பண்டையிஷ்டர்கள்வரக்கண்டால்போர்கொடுக்கிறான்
பயந்துநாம்நடக்கும்படிக்கென்ன கொடுக்கிறான்
அம்மா.

செப்புமுலையிரண்டும்குப்புறச் சரிந்ததோ
தேகம் இளைத்ததோதிகழ்கன்னம் சரிந்ததோ
ஒப்புக்கிவன்வருமுன் ஊரெல்லாம் திரிந்ததோ
உலகத்தில்நமக்கிவன் ஒருவன்தான் தெரிந்ததோ
அம்மா.

பழகியதனவான்கள்தனையவர வழைக்கலாம்
பாக்யம்பெருகிவாசல்படிக்கும்கல் இழைக்கலாம்
அழகியசொக்கநாதன்பதம்பாடித் தழைக்கலாம்
அருள்காந்திமதிகிருபையாலேநாம் பிழைக்கலாம்
அம்மா

இராகம்-தன்யாசி-ஏகதாளம்-சாப்பு.

பல்லவி:

முங்கிமுழுகிறபெண்ணே-எனக்கொரு
முத்தம்தாராயோ

அநுபல்லவி.

தாங்கிபேருகவேள் வாழுங்குறுக்குத்துறைத்
தாம்பிரவன்னிநதிக்குள்ளேநின்று — முங்கி

சரணங்கள்.

ஒண்டியாய்வந்திங்கேநிற்கிறாயேஉன்
ஊரென்னபேரென்ன
எண்டிசையிலும்உன்போல் கண்டதேயில்லே
எனை ஆசைக்கடல்தனில்முங்கும்படிக்கே — முங்கி

சல்லாஉடைமேல்தெரியுதேகொங்கை
தங்கக்கலசம்போல்
உல்லாம்உனக்கேதத்தம்பண்ணிப்போட்டேன்
இனிநான்ஒரிஸ்திரீமுகம்பார்க்கமாட்டேன் — முங்கி

வங்கிகளோசிவமாலைகளோஎல்லாம்
வயிரத்தில்பூட்டுகிறேன்
கெங்கைகரையிலேநின்றுநான்சொல்லுகிறேன்
கூறினவரைகடவாமலேநடப்பேன் — முங்கி

கம்மல்சுழலுதேஉதடும்வெளுத்ததே
கண்கள்சிவந்ததே
சும்மாமுங்காதேநீர்கொள்ளப்போகுது
தோகையேகரையேறுவெகுநேரம்ஆகுது — முங்கி

யார்செய்தபூஜாபலனோபெண்ணே
இன்றுன்னைகண்டேன்
ஓர்செய்திசொல்கிறேன்நீஎன்னசொன்னாலும்
உனைவிடுவேனென்றுன்கனவிலுமெண்ணாதே — மு

தேவேந்திரன்கொலுமண்டபம்போல்பல
சிங்காரமேடையுண்டும்
பூவாயந்துவிரித்தமஞ்சங்களும்உண்டு
பூஞ்சோலையும்வுண்டுநாம்சேர்ந்திடலாம்வா — முங்

மிக்கவே அழகியசொக்கநாதன் பதம்
வித்தையாய்ப்பாடலாம்
பக்கமாய்உருமலைக்குமரனைக்கும்பிட்டு
யவன்கைமேல்கிடைத்தது கலங்காமல்கூடலாம்

இ-ம்-உசேனி-ரூபகதாளம்

பல்லவி.

ஜாலம் என் அய்யா-இந்த
ஜாலம் என் அய்யா

அநுபல்லவி.

சோலையிலேநடந்ததைச் சொல்லும்நேற்று
வாலசுப்ரமண்யவேலவா இன்னம் ஜாலம்

சரணங்கள்.

எண்ணிப்போட்டீர் பயித்தியக்காரியென்றே
தண்ணீரிலேதடம்பிடிப்பேனேசாமி ஜாலம்
கட்டிமுத்தம் இட்டுக்கொண்டீரானன்றாய்
இஷ்டப்படிக் கென்னென்ன செய்தாள்சொல்லும் ஜா
அழகியசொக்கநாதன் சொல்லுக்கருள்
பழகியதிருமலைக்குகா சும்மா ஜா

இஃது

லாவணி,

கண்ணிகள் எட்டு.

இ-ம்-காதநாமக்கிரியை-ஆதிதாளம்.

எனதுகண்மணியே

ஓர்செய்தி சொல்கிறேன்

பெண்ணே உஙிதஹ ——இக்கிதமாய்க்கேளு
என்னென்றுசொல்லுவேன்
அந்தரமானந்தம்
——யாருக்கும் கிடையாது

பெண்ணே நல்ல

மனமகிழ்ந் தொருநாள்
மாலையில் சோலையில்
——மலர்கொய்யப் போய்கின்றேன்
மதனசுந்தரம்போல்
ஒருவன்என்னருகே
வரக்கண்டு மதிமருண்டேன் உ

பெண்ணே என்மேல்

சகியேஎங்கேஉன்
ஊரென்னபேரென்ன
——தயவுசெய்துரையாயோ
தனிமையாய்வந்திங்கே
நிற்கும்படிக்கென்ன
தவஞ்செய்தேன் என்றடுத்தான்

பெண்ணே யார்க்கு

பகலிலும்விளங்கும்உன் ௩
முகசந்திரவிம்பத்தைப்
——பார்த்தால் பசிபோமே
பவளம்போல்சிந்த
அதரத்தேன்ஊறலைப்
பகருவாய் துடிக்குதென்றான் ௪

பெண்ணே தங்கத்

கடைசல்செப்போபந்தோ
செவ்விளநீரோ
——கலசமோஉன்கொங்கை
களபமார்போடணைத்
தாசைதீர்த்திடவுன்னைக்
கலவாமல் போகேன்என்றான் ௫

பெண்ணே சும்மா

படபடப்பாய்உச்சி
தொடுத்துள்ளங்காலவரை
——பார்த்தான்தலைகவிழ்ந்தேன்
பளிச்சென்றுவிச்சேர்த்துக்
கட்டிமுத்தமிட்டான
பரவசம்ஆகிவிட்டேன் ௬

பெண்ணே கோகிலைக்கு

கலையாயுரிந்திள
முலையைநெருடியே
கனிவாயிதழ்பருகி
கலந்தசயபிரமத்தை
என்னசொல்வேன் அவன்
கைகண்டசாமி அடி. எ

பெண்ணே கொஞ்சுகிளி

இலகுநம் அழகிய
சொக்கநாதன் தமிழ்
இன்பப்பாகர்பாடித்தேசன்
இசையவேய்க்குழலைத்
தூத்தானகிருஷ்ணனென்
றினங்காட்டிமறைந்தானேடி அ

இ-ம் செஞ்சுருட்டி-ஏகதாளம்.

**பல்லவி:**

நான்சொல்லச்சொல்லக்
கேளாமல்போனாயல்லவா
புத்திவந்ததே
நம்மைப்பேணித்தானேயிவன்
வேலவரென்றெண்ணிக்கூடப்
பார்த்தாயில்லையே

கொஞ்சிக்கூட ஒப்பாகுமோ

ஏன்சும்மாகரைக்கின்றாய்
எண்ணிஎண்ணிஇனிமேல்
ஏறிட்டுப்பாரான்குகவேள்
ஏனென்றாலோ
எலுமிச்சம்பழம்போல்இரண்டு
பெண்களைக்கலியாணஞ்செய்
திருக்கின்றான்என்றேனே கூ
மருவும்அந்தப்பெண்கள்பெயர்
வள்ளியம்மைதெய்வானை

அணைகட்டிலே எப்பொழுதும் — மாறுமல்வீற்றிருக்கிறார்
ஆணைமறந்துபோய்

மையல்கொண்டுசாமி அவர்
கைவசமாய்விட்டதை நான்
வகைவிவரமாய்
மோடிபாய்வள்ளியத்தே
ஊடல்செய்பத்தாவக்கிறுல்

காலேயெழுந்து நல்லவசொல்லி — மூன்றுதாம்கும்பிடுகிறுன்
மதிமோசமாம்

முன்னும்பின்னும்பாராமல்
எனனமோகொணட
மோகவெறியால் நான்
மூக்கியமாய் அழகிய
சொக்கநாதன்பாடலில்

முருகையன் அனவற்ற — மோகமுள்ளோன்ஆணபடியால்
அதைமுடங்காமல்

முப்போதும்பாடிறுல்
தப்பாமல்வலியவும்
முன்வருவானே

இ—ம்—நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

பட்சம்இருக்கவேணும்
போய்வாரேன்என்மேல்

அநுபல்லவி.

இட்சணமேயென்னைக்கூட்டிவரும்படி
வுனக்காள்வந்திருக்குதே என்செய்வேன்சாமி பட்

சரணங்கள்.

புருஷனேகடுங்கோபி

வருஷம் ஒன்றுச்சு
புகல்சும்மாசொல்வதுதர்மமோயினிப் பட
கூடிக்கலந்தஇன்பம்
நாடியுருகும்என்னைக்
கொஞ்சமும்மறந்திடக் கூடாதுஎன்றும் பட
அழகியசொக்கநாதன்
துதிக்கும்ஷண்முகத்தெய்வம்
அன்பாய்எந்நாள் கூடாதுவைக்குமோசாமி பட

இ-ம் பியாக்கு-ஆதிதாளம்.

பல்லவி.

அதற்குள்ளேஆத்ரமென்ன
திரளட்டுமேன்

அநுபல்லவி.

கதிக்கும்நற்குணமுத்து
சாமிராஜேந்திரா
கன்னியைஎன்னசெய்வீர்
சற்றேபொறும் அதற்குள்ளே

சரணங்கள்.

ஆசைக்குச்சரசம்தான்செய்தாலும்
அரும்பினில்வாசம்உண்டோரசம்உண்டோ அத
சிமிழ்ப்போலதானேம்பிர்திடிக்கிறது
செப்புப்போல்ஆனல்அல்லோகையபற்றலாம் அத
அழகியசொக்கநாதன்பதங்களைக்கேளும்
அணிமுத்துசாமிமன்னஇதென்னமோகம் அத

இராகம்-பூரிகல்யாணி-ஏகதாளம்.

பல்லவி.

எப்போதுகாணுவேனோமானே

அநுபல்லவி.

மெய்யோதும்மெய்யன்பர்
செப்பிடும்செந்தூர்

முத்தையனைத்தேடி
மெத்தமோகத்தேன்சேர எப்போது

சரணங்கள்.

கோலாகலத்துடனே
மாலாய்லோர்நாள்க்
கொஞ்சியரஞ்சிதஎன்காமியை இனி எப்போது
முன்னம்போல்நன்னயமாய்
இன்னம்ஒருக்கால்
முத்தங்கொடுத்துசுகித்துவிளையாட எப்போது
அழகியசொக்கநாதன்
தொழஅருள்செய்யு
அற்புதபொற்பதசுப்ரமண்யவேளை எப்போது

இராகம்-அமிர்தகல்யாணி-ஏகதாளம்.

பல்லவி.

யாருனக்கேன்-பயமாபோடி-போ

அநுபல்லவி.

பாருக்குள்உயர்செந்தில்
பதிவடிவேலனைக்
கோரிக்கைப்படியே
சேர்வேன்நான் யாருனக்கேன்

சரணங்கள்.

வாயைப்படைத்தவர்
வல்லதைசொல்வார்
நீயெந்தவிதமாய்ச்
சொல்கிறாய் யாருனக்கேன்
அன்னமே இதனாலே
ஆர்இனிஇளப்பமா
சொன்னாலும் சொல்லட்டும்
என்-இஷ்டம் யாருனக்கேன்
மிக்கவே-அழகிய
சொக்கநாதனுக்கருள்

சற்றுரு-பாலனைக்
கூட்டி-வா யாருனக்கேன்

இ-ம் காபி-ஆதிதாளம்.

பல்லவி.

உள்ளதைச்சொல்நீ கள்ளமில்லாமலே

அநுபல்லவி.

வள்ளிதெய்வானை கந்தன்
வருவானோவாரானோ உள்ளதை

சரணங்கள்.

பெய்தடுமாறிப்போச்சோ
விசேஷம்ஏதேனும் உண்டோ
செய்தியைச்சொல்லும்போதே
சிரிக்கிறாயே சும்மா உள்ளதை

நடந்ததைமறக்காதே
நான்வேணுமோவேண்டாமோ
உடந்தைகள்யார்பார்அங்கே
உனக்கென்னதாட்சண்யம் உள்ளதை

அழகியசொக்கநாதன்
அருந்தமிழ்க்கருள்கந்தன்
பழகும்பெண்ணைகண்ணால்
பார்த்தாயேஉன்னை உள்ளதை

இ-ம் - செஞ்சுருட்டி ஆதிதாளம்

பல்லவி.

உனக்கேண்டி-வைத்தியமா-ஏ
துனக்கேண்டி-வைத்தியமா

அநுபல்லவி.

தனிக்கவென்சாமத்தில்
வெளியேபோய்நிற்கிறாய்
இனிக்குகன்வரமாட்டான்
கதவைஅடை உனக்கேண்டி

சரணங்கள்.

கவலைநீ அடைகிறாய்
அவன் இந்தவேளையில்
எவளுடன்கொஞ்சிக்கொண்
டிருக்கிறானோ — உனக்கேண்டீ
பூசிச்சிங்காரிக்கும்
போதுசிரித்தேனென்று
எனினையேஇப்போ
தென்னாச்சு — உனக்கேண்டீ
அழகிய சொக்கநாதன்
பதம்பாடும்பேரையல்லோ
பழகிச்சண்முகன் இஷ்டம்
பண்ணுகின்றான் — உனக்கேண்டீ

இராகம்-காபி-ரூபகதாளம்

பல்லவி.

சொன்னபேச் செங்கே—நீர்

அநுபல்லவி.

வன்னமயில்வாகனரே
முன்னம்முன்னம்என்னிடத்தில் — சொன்ன

சரணங்கள்.

நன்றிமறக்கலாமோசாமி
நான்பிசகாய்நடந்ததுண்டோ
என்றும்உன்னை அன்றிவேறே
யார்முகம்பாரேனென்று — சொன்ன
கம்பிக்காரைவாங்கிகொலுசு
காய்பென்றுசகாட்டிச்சேர்ந்தீர்
நம்பிமோசம்போனேன்மெத்த
நாணையம்போல்ஆளைவிட்டீர் — சொன்ன
அழகியசொக்கநாதன்
அருந்தமிழ்க்கருள்முருகர்

பழகியவென்னைக்கொஞ்சிக்கொஞ்சிப்
பஞ்சணையில்கெஞ்சிக்கெஞ்சிச் சொன்ன
பவனிக்காதல் கண்ணிகள்-௰௩.

இராகம்-தோடி-ஆதிதாளம்.

அன்னமே இனிநான் என்னசெய்வேன்
ஆசைக்குமருந்துசொல்லு அடி அடி அன்ன
பன்னகாபரணநெல்லைநாதர்
பவனியைப்பார்க்கப்போனேன் மயங்கினேன் அன்ன
தாருகாவனத்துப்பெண்கள்போலச்
சங்கமும் அரைஉடையும் இழந்தேண்டி அன்ன
சேரும்என்னைக்கண்பாரும் என்றன்
சிந்தையைக்காரும்என்றேன் தயங்கினேன் அன்ன
மாதிடம்கொண்டார் ஆதலாலே
மனம்இரங்காமல்போனார் ஐயையோ அன்ன
சோதிடம்கேட்டேன் குறிகள்பார்த்தேன்
தூதுகள்பத்தும்விட்டேன் வரக்காணேன் அன்ன
சொற்பனசுகத்தைவிரும்பினாலும்
தூக்கமோகொஞ்சம்கூடக் கிடையாயே அன்ன
சற்பமும்மலையும்தொட்டார் அல்குல்
சற்பமும்கொங்கைமலையும்-தொடுகில்லார் அன்ன
படைத்தவர்வெள்ளிப் புலியைவதைத்தார்
படைமதன்தென்றல் புலியைவதைசெய்தார் அன்ன
திகைத்திடஎன்னை வாட்டும்மதியைச்
சிரசின்மேல்தூக்கிவைத்துக் கொண்டாரே அன்ன
அனங்கனும்இப்போதென்னை வருத்தி
அவரிஷ்டம்பெற்றுக்கொள்ளத் துணிந்தானே அன்ன
ஸ்தனங்கள்இரண்டும் விம்மும்போது
தரிகொள்ளமாட்டுதில்லை ஓகோஎன் அன்ன
என்னடி பாலும்தேனும்கூட
என்வாய்க்குவேப்பங்காய்போல் கசக்குதே அன்ன

கன்னிநான்கொண்ட விரகசோகம்
கவனியார்பவனிபார்க்க ஏன்போனேன் அன்ன

பழகியசகிமார்களயம்-என்றே
பருந்தணல்வாரிவைத்தேவீசினார் அன்ன

அழகியசொக்கநாதன்போற்றும்
அருள்நெல்லைநாதனைப்போய் அழைத்துவா அன்ன

இராகம்-சங்கராபரணம்-ஏகதாளம்.

பல்லவி.

இன்னமும்-மோடிசெயதால்
என்னமாநான்சகிப்பேன்

அநுபல்லவி.

பன்னக-பூஷணா என்மேல் இன்னமும்

சரணங்கள்.

ராமபாணம் போலப்பாயுதே
காமபாணங்கள் சேரவே
மாமயல்கொண்டேன் இன்னமும்

கைகலந்த வைபவமெண்ணி
கைகிறேன் சுவாமி நானென்ன
செய்குவேன்சாமி இன்னமும்

தேநய அழகியசொக்க
நாதன்போற்றிடும் நெல்வேலி
நாதரேமெத்த இன்னமும்

சொற்புனைசுரதசுகானந்தலகிரி.

இதனைப் பாடவேண்டிய மெட்டுகள்-அ.

முடிவில் விவரிக்கப் பட்டிருக்கின்றன.

சுந்தரஞ்சேர் கண்மயிலே
அந்தரங்கப் பெண்மயிலே
தோழியேநான் உண்மையிலே
சொல்லும்நல்ல செய்திகைக்கேள் சு

செண்பகப்பூஞ் சோலையிலே
பெண்களுடன் மாலையிலே
சென்றுலவும் காலையிலே
நின்றேனடி நான் தனியே ௨

இக்கிதவை போகத்திலே
அங்கொருவன் வேகத்திலே
என்முன்வந்து மோகத்திலே
சொன்னதெல்லாம் கேளடியே ௩

மலர்சொருகும் கொண்டையிலே
கலகவிழிக் கெண்டையிலே
மனமலைத்துன் அண்டையிலே
வந்தேனடி செந்தேனே ௪

பந்தடிக்கும் மேடையிலே
வந்துவிளை யாடையிலே
பார்த்துநின்ற ஜாடையிலே
பறிகொடுத்தேன் என்மனதை ௫

மாங்குயிலின் ஓசையிலே
பாங்கியுடன் பேசையிலே
மான்விழியுன் ஆசையிலே
நான்முழுகிப் போனேனடி ௬

என்றனது செங்கையிலே
குன்றைநிகர் கொங்கையிலே
இஷ்டமாய்நெ ருங்கையிலே
விட்டவரக்கூடாதென்றேன் ௭

துலங்கிடும்உன் மூக்கினிலே
இலங்கிடும்புல் லாக்கினிலே
தூக்கினதுன் வாக்கினிலே
சொன்னால்அதே போதும்என்றான் ௮

மெத்தவெகு மூத்தனமாய்
மூத்துஎன்றேன் மெத்தனமாய்

மின்னேகப் டத்தன்மாய்
என்னைமுத்தம் இட்டானடி ௯

தோள்அணிமேல் தட்டவிழ்ந்தான்
வாளரவிக்கைக் கட்டவிழ்த்தான்
தோளும்அரைப் பட்டவிழ்த்தான்
நாணிக்கண்ணைப் பொத்திக்கொண்டேன் ௰

கலவுசொல்லிக் கெஞ்சினதும்
கலவியினில் மிஞ்சினதும
நன்னயமாய்க் கொஞ்சினதும்
என்னவிதம் என்றுசொல்வேன் ௰௧

சார்ந்தென்னமுன் குந்தினிலே
சேர்ந்தவன் அப் போதினிலே
தங்கமயில் மீதினிலே
ஷண்முகமாய் நின்றானடி ௰௨

சீர்பெருகும் காலழகும்
மார்பினில்முந் நூலழகும்
செங்கைவடி வேலழகும்
கண்குளிரப் பார்த்தேனடி ௰௩

சத்துருவாய் நஞ்சகியாள்
சித்திரையெ னுஞ்சகியாள்
தனைக்கலைக்க வஞ்சகியாள்
என்னைப்பிரித்தாள் சாமியுடன் ௰௪

மனமகிழ்வேன் என்பவனை
கனவில்அணைந் திவ்வேனை
மனறந்துகொண்ட செவ்வேனை
மறக்கமனங் கூடுதில்லை ௰௫

அழகிய சொக்கநாதன்
தொழ அருளும் மிக்கநாதன்
அன்னைவள்ளி பக்கநாதன்
தன்னைஅழைத் தோடிவாடி ௰௬

| இராகம் | தாளம் | சேரவேண்டி |
|---|---|---|
| ஆனந்தபைரவி | அடதாளசாப்பு | |
| காபி | ஏகதாளம் | குயிலே |
| நாதநாமக்கிரியா | | |
| ஆனந்தபைரவி | | |
| காபி | ஏகதாளம் | அன்னமே |
| சஹானா | ஏகதாளம் | |
| நாதநாமக்கிரியா | ஆதிதாளம் | |
| ரீதிகவுளா | ஏகதாளம் | என்கண்மணி |

இ-ம் பியாகடை-சாப்புதாளம்.

பல்லவி.

மானேஉன் ருலே ஆகவேணுமேயல்லாமல்
மற்றொருத்தரால் ஆகுமோ.

அநுபல்லவி.

வானோர்கொடை முத்துசாமிராஜேந்திரா
மன்மதன் ஊடல் மனதைத்திருத்திட மானே
எண்ணிக்கைக்காயிரம்பேர்.

சரணங்கள்.

இருந்தென்னென் சோகத்தை துரை
இடம்போய்ச்சொல்லவென்றால்
அறியேன் ஒரு காகத்தை
புண்ணியம் உண்டதில்
அறியவேணும்உன்விர்வாகத்தை ஒரு
போதும்மறக்கவே
மாட்டேன் அடியேன்சிநேகத்தை
பெண்ணேதணிந்தவனோடேதிர் வாதிக்க
பேச்சிலேஅவன்உள்ளடக்கிடப்பினேச் சோதிக்க

கண்ணே அவன் ஒப்பும்படி நன்றாய் போதிக்க
கருத்தில் நினைத்த என் காரியம் சாதிக்க மானே.

சற்று நான் காடி
இருந்தால் என்னுடியைத் தாங்கியே சமா
தானஞ்செய்பவன் என்ன
மாயிருக்கிறான் என்னை நீங்கியே
பற்றுவைத்தேதைக்
கேட்டாலும் அக்ஷணம் வாங்கியே கரும்
பக்ஷம் உள்ளானை எப்
படி மறப்பேன் அடி பாக்கியே மானே
முற்றும் அவன் கொண்டமோடியை மாற்றிட
முன்போல் இஷ்டமாயிருக்கும்படி தேற்றிட
மற்றும் என் இயல்பெல்லாம் தவறாமல் சாற்றிட
வருந்தி என் கோரிக்கைதனை நிறை வேற்றிட

மன்னவன் நினைப்பு
வரும்போதெல்லாம் இதழ் ஊறுதே முத்து
மாலை பிறழக்
குலுங்கிள நீர்முலை மீறுதே
கன்னல் ரசமும் செந்
தேனும் பாலுங்கூடக் காறுதே சற்றும்
கண்ணுறக்கம் இல்லாமல்
காமவெறி தலைக்கேறுதே
என்னடி இவ்வேளைக்கு தவினால் மோசமோ
எனக்கிப்படி நேர்ந்ததுனக்கு சந் தோஷமோ
உன்னைப்போலவே மற்றப்பேர் உண்மை நேசமோ
உன் சாமர்த்தியற்குபிர யாசமோ மானே

அம்புவிதனில் ராஜ
வல்லிபுரம்வளர் யோகவான் செஞ்சொல்
அழகிய சொக்க
நாதன் தமிழ்க்கதி மோகவான்
நம்பினபேர்களைக்
கைவிட்டிடாதவை போகவான் பாவ

நாசன் அருள்முத்து
சாமிராஜேந்திர விவேகவான்
செம்பொற்புயஞ்சேரத்துதிக்கும்என் ஆத்திரம்
தெரியாயோஉனக்கும்நான்சொல்வேனோ தோத்திரம்
சம்பிரதாயத்தால்இணங்கிடநீயே பாத்திரம்
தயங்கினேன்தயவுசெய்வாய்இது மாத்திரம் பானே
கண்ணிகள்எட்டு,

இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

கூட்டிவந்தால்உன்றனக்குக்
கோடிகோடிபுண்யமுண்டு கூட்டி
நாட்டிகமாய்ச்சேரஎன்றன்
சரசமுத்துசாமிதுரையைக் கூட்டி
சிந்தனைபாணத்தினாலே
சிந்தைநொந்தேன்இந்தவேளை கூட்டி
மெத்தனமாய்நீயில்லாதே
விரகஞ்சகிக்கக்கூடுதில்லை கூட்டி
கந்தமலர்கள்வாடி
கலந்தஇன்பம்நாடுதடி கூட்டி
இந்தளனதுசந்திராரத்தை
இனமாய்உனக்கோநான்தந்தேண்டி கூட்டி
பழகியஎன்மேல்தயவுண்டாகப்
பலவிதமாம்கலவிசொல்லிக்கூட்டி கூட்டி
அழகியசொக்கநாதன்வாழ்த்தும்
அருமைமுத்துசாமிதுரையைக் கூட்டி

இ-ம் செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்றுவந்துசேருவார்-எந்தவிதத்திலும்

அநுபல்லவி.

உன்றன்முத்துசாமிவேள்
உன்னைப்பிரிந்திருப்பாரோ இன்று

சரணங்கள்.

௧ காகம்கதறுதுகவலைப்படாதே
சோகம்வேண்டாம்கண்ணீரைத்துடைக்கக்கோவிம்
இன்றுவந்து [யாதே
மனஉறுதிகொள்ளவலக்கைநான் தாரேன்
இனிமேல்தாமசம்இல்லையென்சொல்லைத்தான் பாரேன
இன்றுவந்து
நய அழகியசொக்கநாதன்செல் நேசன்
புயபலராஜவல்லிபுரமுத்துசாமி போசன்
இன்றுவந்து

இ-ம் பைரவி-திரிபுடைதாளம்.

பல்லவி.

இத்தனைசோகமேன்-அடி
பெண்ணேகண்ணே

அநுபல்லவி.

மத்தகமுலைபார்சேர்மதன்சுந்தரனை
முத்துசாமித்துரைமேல்மோகம்நீகொண்டாயோ

சரணங்கள்.

பாலும்வேண்டாம்என்றாய்நாலுநாளாய்
மாலைக்குழல்சேர்வதும்வளையல்கழலுவதும்
சேலைநழுவுவதும்தெரியாதிருக்கிறாயே இத்த
இடக்குகள்பேசமாட்டாரோபார்த்தோரெல்லாம்
மடக்கொடிபேநீமெத்தமயக்கமேகொண்டாலும் [போ
அடக்கவேண்டாமோதன் னெஞ்சறியாதபேயாட்டின்
பழகியநாளும்அன்பமோஉள்ளத்தைச்சொல்
அழகியசொக்கநாதன்புகழ்முத்துசாமிதுரை
கழலில்வீழ்ந்தாலும்உன்கருத்தைமுடித்திடாரோ இத்த

இ-ம் தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

இனிமேல்நான் என்னசெய்வேண்டி

அநுபல்லவி.

தனமால்முத்துசாமிவாராமல் இனி

சரணங்கள்.

அம்புஜவல்லியின்வப்பறியாயோ
அங்கேயிவன்போகலாமா
அந்தரங்கமாகச்சந்ததம்இருக்க
அவள்கைமருந்திட்டுப்போட்டாளாம் இனி

அடைகாக்கும்கோழிபோல் இடைவிடாமல்தினம்
அவளுடன் இருக்கின்றானும்
அண்டைவீட்டுமீனாள் கண்டுவந்துரைத்தாள்
அணைகடந்தவெள்ளம்ஆச்சுதே இனி

மிக்கவேஅழகியசொக்கநாதன்பதம்
விரும்பியென்னைப்பாடச்சொல்வான்
வீரன்முத்துசாமிதீரன்சொல்மதியாமல்
வீம்பால்கெடுத்துக்கொண்டேனே இனி

இ-ம் கமாஸ்-ஆதிதாளம்-சாப்பு.

பல்லவி.

வாதென்னடா-மன்மதா
என்னுடன்சும்மா

அநுபல்லவி.

நீதியோஉனக்கிது
நெல்லைநாதர் வருமுன்னம் வாதென்

சரணங்கள்.

உரகாபரணரைஒருதினம்பார்த்து
விரகநோய்சகிக்காமல்
மெலிந்துவருந்தும்வேளையில் வாதெ

சலிக்காதென்மேலேசரம்எய்கிறாயே
பலிக்குமோஅவரிடம்
பட்டபாட்டைஅறியேனோ வாதென்

தழல்நேத்திரர்நெல்லைச்சங்கரர்வரட்டும்
அழகியசொக்கநாதன்
அருமைப்பதத்தால்சொல்கிறேன் வாதென்

பேரா.

இ-ம் செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

முருகையனே அருள் உனை நம்பினேன்

அநுபல்லவி.

உருமாமலைதங்கும்வேல் முருகை

சரணங்கள்.

உனையன்றியே
எனை ஆள்பவர்உண்டோமோ
வினைதீர்த்தினி உய்ய-வே முருகை

அயில்வேலவா
மயில்வாகனஷண்முகா
குயில்போல்இருமாதர்சேர் முருகை

கழல்தந்திடும்
நிழல்சார்ந்திடஎண்ணியே
அழகியசொக்கநாதன்சொல் முருகை

இ-ம் செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

பிறந்தென்ன லாபம்
இறந்தென்ன லாபம்

அநுபல்லவி.

சிறந்திடும்-காந்திமதி-தேவிபொற்-பாதத்தை
மறந்தவர்பூமியில் மானிடராகப் பிறந்

சரணங்கள்.

கனங்கொள்மெய்ப்படியவர்
இனங்களைச்சேராமல்
தினங்காமப்பேய்கொண்டு திரிகின்றபேர்கள் பிற

தோஷம்இல்லாததேகம்
நேசமாய்த்தந்தாளைப்
பூசியாதிருக்கின்றோர் பூபாரமல்லாமல் பிறந்

அழகியசொக்கநாதன்
தொழும்நெல்லைஅம்பிகை
குழல்பழந்திகபாகதிநலய்தேடார் பிறந்

இ-ம் காபி-ஏகதாளம்.

பல்லவி.

அருள்செய்ய இதுநல்ல தருணம்அம்மா

அநுபல்லவி.

சொருபசுந்தரயன்னூர்க்
கருமையாய்ப்பெரியாழ்வார்
தொடுத்தபூங்கோதை குடிக்கொடுத்தபொன்னே

சரணங்கள்.

புண்ணியம்செய்யாகுற்றம்
எண்ணியென்னைத்தள்ளிடாமல்
பூமாதேவியாகிய நீபொறுத்திரக்கி அருள்
கும்பிடுபெய்யன்பர்சூழச்
செம்பொன்மணியண்டபத்தில்
கொலுவீற்றிருக்கின்ற கோதையம்மே அருள்
அழகியசொக்கநாதன்
மொழியுஞ்செந்தமிழ்க்கன்பாய்
அருளுஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாளே அருள்

இ-ம் அசாவேரி-ஏகதாளம்.

பல்லவி.

அம்மாயெல்லாம்நீதந்தபாக்யம்
முற்றும்—ஆதரித்தாள்வதுன்பாதம்

அநுபல்லவி.

மெய்முழுவதும்படிகம்போலுள்ள
மின்னேபொன்னேமெய்வாழ்வே
வெண்கமலாசனமேல்மேவியதாயே
மலர்——வேதன்கொண்டாடும்தேவி அம்மா

சரணங்கள்.

இம்மையில்என்னைவலியஆட்கொள்ள
என்னபுண்பம்யான்செய்தேன்

இந்தமட்டும்கருணைநீசெய்தபடியால்
உன்னால்—எங்கும்பரிசுத்தம்ஆனேன் அம்மா
அந்தரங்கமாய்ச்சிலம்பொன்றீய்ந்துநீ
அந்தாளக்கம்பர்க்கருள்செய்தாய்
அந்தவிதம்எனையும்ஆட்கொள்ளவேண்டும்
செஞ்சொல்-ஆனந்தநித்யகல்யாணி அம்மா
அங்கையில்மணிவடமும்எடுக்கொள்
அரசேஞானசாஸ்திரவதியே
அழகியசொக்கநாதன்இசைபெருக
கல்வி——அருளும்கிருபாநிதியான அம்மா

---

உ

கடவுள் துணை.

இப்பதங்களை அக்ஷரலோபமின்றிப்
பாமரபண்டிதரஞ்சிதத்துடன் பாடவல்லவர்களாகிய
திருநெல்வேலி ஒற்றைத்தெருவிலிருக்கும்
மகா-ா-ா-ஸ்ரீ

ஸ்ரீநிவாசரவர்கள்பேரில் இயற்றியது.

இட்சணைபதமிழ் தெலுங்கு சமஸ்கிருதங் களிற்பதசா
கித்யமெல்லாங்
தெட்சணநெல்வேலிவளர் சீனிவரசேந்திரனுஞ் ❙
சிங்குக்குட்டி
லக்ஷரபட்சணமின்றிச் சுதிலயைக்கியானத்துடனே
யனைவோருக்கும்
பட்சம்வரப்பாடுகின்றான் கேட்போர்தஞ்செவிசெய்த
பாக்கியந்தானே

---

## தனிப்பதங்கள்.

இ-ம் கமாசு-தாளம்-அட்தாளம்.

பல்லவி.

ஜாலஞ்செய்யாதேவாடி யென்கண்ணே
ஜாலஞ்செய்யாதேவாடி யென்கண்ணே

அநுபல்லவி.

கோலமலர்மேனியுள்ள
கோதைவிழிமுத்தங்கொள்ள ஜாலஞ்

சரணங்கள்.

வாலிபமாதேவாது செய்யாதேநல்ல
வாழ்வுதரிமாமதுரவாயிலொரு முத்தந்தர ஜாலஞ்
பாரமுன்மேலே பாரருளாளேமகா
பாரமுலைமீதுதொட பாருசிதமுத்தமிட ஜாலஞ்
நீரதிபோலே நேர்வதினைலேபுகழ்
நீடியிலேயினிய நேயகனைமுத்தஞ்செய ஜாலஞ்

இ-ம் கேதாரகவுளம்-தாளம்-ஆதி.

பல்லவி.

இதுநியாயமோசாமி-ஆ-ஆ-ஆ-ஆ
இதுநியாயமோசாமி
இருள்சேர்வினைபாவையுமேயகலப்
புரிஞானியரேபுகழ்மாதவரே இது

அநுபல்லவி.

சதுர்வேதமுந்தெரிந்து
பிர்மகுலத்தில்வந்து
தவங்கள்செய்ததுபொய்யோ
சாதியறியீரோஐயோ இது

சரணங்கள்.

கோலவிழிகளில்முத்தங்
கொடுப்பதென்னநிமித்தம்
சீலமுனிவோர்கள்சித்தம்
திகைத்தாலதுவருத்தம்
திகழ்தருமிளவதி
தையர்மனமிகுநய
மகிழ்வொடுசுகமிலை
வளர்தருவகைசெய இதுநியா
தாயமிகக்கொண்டேனென்றும்
சாலஞ்செய்யலாமோவென்றும்

ஜோதிதமாமயிலென்றும்
தொடுவேன்ஸ்தனத்தையென்றும்
சுழலுமென்மனதினை
யொருவகைகிலேதா
விழைவுடனணையடி
யெல அருகினில்வர — இதகியா
கன்முகிதநீகொடுத்து
கபடந்தனைவிடுத்து
நன்னயகாமந்தொடுத்து
நடந்தடியென்றடுத்து
நலமிகுகல்விசெய்
யென்மயில்பெருகவும்
வலுவினியொருவகி
தையர்மிசையுருகவும் — இதகியா

இ-ம் யமுனா-தாளம்-ரூபகம்.

பல்லவி.

பிரமைமீறுதகிருபைபாரடி
பெண்ணோரதிக்கண்ணே — பிரமைமீறுது

அநுபல்லவி.

ஸ்ரமமாகவேமதனுகம்
கேளிச்சுயகிரிடைசெய — பிரமைமீ

சரணங்கள்.

அதிமோகனமயிலேயெனை
அணைவாயருந்தனமேகனி
அதரத்துளி அமிர்தத்தினில்
மதியானதுதளர்வாகுது
மாப்பகைதீரப்புத — பிரமைமீறுது
கழயோகமும்வருமேமலர்க்
கையாலெனைத்தொட்டி-இந்தக்
காமக்களைதீரும்இன்பக்
கனிவாய்முத்தமிட்டு
அனமேநல்லதினம்நாளினி
ஆசைப்பட்டநேசித்திட — பிரமைமீறுது

மகிழ்வாகவேகும்பஸ்தன
மலையைக்கையிற்கொட்டி-சுகம்
மருவும்அல்குல்வழிகாட்டியுன்
மனதிற்ஜலம்விட்டி
ஜகமேழுமுன்னிகராகுமோ
தாகத்தோடுமோகத்தினில் பிரமைமீறுது

இ-ம் தோடி-ஆனந்தபைரவி.

பல்லவி.

பணத்தைநீவாங்கிக்கொள் பாவிஎன்னைவிடடா
பதறுதேஎன்றிரேகம்

அநுபல்லவி.

பிணையோஉனக்குநான் பெண்பாவம்பொல்லாது
அணையவந்ததுபோதும் அய்யய்யோநீதந்த- பண

சரணங்கள்.

பிடித்தபிடியிற்கொங்கை பிதுங்கிநெருங்குதையோ
கடித்தகடியிலெந்தன் கனிவாயிதழ்நோகுது
மடிப்பமாகப்பேசி மண்டியிட்டுமேல்கொண்டு
அடித்தவிசையிலெந்தன் அறைவயிர்நோகுதே-பண
தவமிருந்தென்னைப்பெற்ற தாய்கண்டால்சகியாளே
அவசரமாயென்னை அருகிலழைத்தபோது
குவலயம்புகழ்கின்ற கோபாலரேசாட்சி
சுவரிருந்தல்லவோ சித்திரமெழுதலாம்-பண

கீர்த்தனை—இராகம்-தோடி—ஆதிதாளம்.

பல்லவி.

தெண்டனிட்டேனென்றுசொல்லடி-சுவாமிக்குநான்
தெண்டனிட்டேனென்றுசொல்லடி

அநுபல்லவி.

தண்டலைவிளங்குந்தில்லை தலத்திற்பொன்னம்பலத்தே
கண்டவர்மயங்கவேடங்கட்டியாடுகின்றவர்க்கு தெண்

சரணங்கள்.

கற்பூரவாசம்வீசும்பொற்பரந்திருமுகத்தே
கனிந்தபுன்னகைபாடக் கருணைக்கடைக்கணுட

## பதசாகித்யங்கள்.

றபார்பொன்னம்பலத்தெயானந்தத்தாண்டவ
மாடிக்கொண்டேயென்னையாட்டங்கண்டாருக்கு
இழிந்தாலும்நம்மையிங்கேஏற்றுவாரென்றடைந்தால்
ஏற்றுவார்போலேபின்னுமிழிவைப்பாருக்குப்
பழந்தாநழுவிமெல்லப்பாலில்விழுந்ததென்னப்
பசப்பிப்பசப்பியன்பாய்ப்பண்டம்பறிப்பவர்க்கு தெண்
சுட்டதிருநீறுபூசித்தொங்தோமென்றாடுவார்க்குத்
தோன்றுதலைமாலையணிதோள்விளங்கவருவார்க்கு
பிட்டுக்காசைப்பட்டுமாரன்பிரம்படிபட்டவர்க்கு
பிள்ளைக்கறிக்காசைகொண்டகள்ளத்தவவேடருக்கு
வாழ்ந்தாரைமென்மேலும்வாழச்செய்பவருக்கு
மாசுபரித்தவர்கையிற்காசுபறிக்கின்றவர்க்குத்
தாழ்ந்தாரையடிதாழக்காண்பவருக்குத்
தானாகிநானாகித்தனியேநின்றவருக்கு தெண்
ஆதியந்தநடுவில்லவானந்தநாடருக்கு
அண்டருயிர்காத்தமணிக்கண்டச்சிகண்டருக்குச்
சோதிமயமாய்விளங்குந்தூயவடிவாளருக்குத் [ர்க்கு
தொண்டர்குடிகெடுக்கவேதுஜங்கட்டிக்கொண்டவ
பாட்டுக்காசைபட்டுமுன்னம்பாவைசெவாயிலிற்போய்
பண்புரைத்ததூதனென்றேபட்டங்கட்டிகொண்டவ
வீட்டுக்காசைப்படுவாரை [ர்க்கு
வீட்டைவிட்டுத்துரத்தியேவேட்டாண்டியாயுலகி
லோட்டாண்டியாக்குவார்க்கு தெண்
தாம்வயிற்றிற்பிறவாதுதானேமுளைத்தவர்க்குக்
சாதிகுலமறியாதுதாண்டவஞ்செய்கின்றவர்க்கு
ஏயதொழிலருளுமென்பிராணநாயகர்க்கு
ஏமாந்தலரையெல்லாமேமாத்துமீசருக்கு
தெண்டனிட்டேனென்றுசொல்லடி சுவாமிக்கிநான்
தெண்டனிட்டேனென்றுசொல்லடி.

திருச்சிற்றம்பலம்.

பதசாகித்யங்கள் முற்றிற்று.